# மல்பூஜாத் கிதாபிற்கு மறுப்பு

தப்லீக் ஜமாஅத்தினரை எதற்காக எதிர்க்கிறீர்கள் அவர்கள் தொழுகைக்குத்தானே அழைக்கிறார்கள் என்று சிலர் கேட்கிறார்கள்.

அவர்கள் அந்த வேலையை மட்டும் செய்தால் நாம் ஏன் அவர்களை எதிர்க்க போகிறோம். ஒரு பக்கம் தொழுகைக்கு அழைக்கிறார்கள். மறுபக்கம் அவர்கள் சத்திய இஸ்லாத்திற்கு எதிரான கருத்துக்களை பரப்பி வருகிறார்கள்.

அது எத்தனையோ இருக்கிறது. அதை எல்லாம் இங்கே எழுதினால் இந்த கட்டுரை மிகவும் பெரிதாகிவிடும். இன்று இந்த கட்டுரையில் நாம் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் தான் பார்க்கப் போகிறோம்.

மல்பூசாத் கிதாபில் பதிவு செய்யப்பட்டுள்ள விஷமத்தனமான விஷயத்தை விளக்கமாக சொல்வதற்காகத் தான் இந்த கட்டுரை.

## பாவமே செய்யாதவர்கள் நபிமார்கள்

நபிமார்கள் சிறு பாவங்கள் பெரும் பாவங்கள் எல்லாவற்றிலிருந்தும் பாதுகாக்கப்பட்டவர்கள். நுபுவத்திற்கு முன்பும் நுபுவத்திற்கு பின்பும் அவர்கள் எந்த பாவமும் செய்ய மாட்டார்கள். பாவங்களை செய்ய தூண்டுபவனே சைத்தான்தான். அந்த சைத்தானே நபிமார்கள் மீது ஆதிக்கம் கொள்ள முடியாது.

இதோ அதற்கான குர்ஆன் வசனம்.

إِنَّ عِبَادِىْ لَيْسَ لَكَ عَلَيْهِمْ سُلْطٰنٌ اِلَّا مَنِ اتَّبَعَكَ مِنَ الْغٰوِيْنَ

*“நிச்சயமாக என் அடியார்கள் மீது (ஷைத்தானே) உனக்கு எவ்வித அதிகாரமும் இல்லை - உன்னைப் பின்பற்றி வழிகெட்டவர்களைத் தவிர” என்று கூறினான்.*

*(அல்குர்ஆன் : 15:42)*

## மல்பூசாத் என்றால் என்ன?

*மல்பூசாத் என்றால் வாயில் இருந்து வந்த வார்த்தை என்று அர்த்தம். தப்லீக் இயக்கத்தின் ஸ்தாபகர் இல்லியாஸுடைய வாயிலிருந்து வந்த வார்த்தையை அந்த புத்தகத்தில் தொகுத்து வெளியிட்டு இருப்பதால் அந்த புத்தகத்தை மல்பூசாதேஇலியாஸ் என்று சொல்கிறார்கள்.*

*அதனை மன்ஜூர் நுஃமானீ என்றொரு நபர் தொகுத்தார். சதகதுல்லாஹ் பாகவி கம்பம் தமிழில் மொழி பெயர்த்தார். அது நமக்கு மிகவும் வசதியாகிவிட்டது. அவ்வாறு மொழிபெயர்ப்பு செய்தால் தான் தமிழ் நாட்டில் உள்ளவர்களுக்கு அந்த இயக்கத்தில் உள்ள குறைகளை தெளிவு படுத்திக்காட்ட முடியும்.*

*தப்லீக் ஜமாத்தை பற்றிய குற்றச்சாட்டுகளும் தக்க பதில்களும் என்ற புத்தகத்தை எழுதியிருந்தார் கலீல் அஹமது கீரனூரி. அந்த கிதாப்பை ஆதாரமாக வைத்து அந்த இயக்கத்தின் வழிகேடுகளை மக்களிடம் காண்பிப்பதற்கு மிகவும் சுலபமாக இருந்தது. அதைப் போன்று தான் தற்போது இந்த மல்பூஜாத் என்ற கிதாபு நமக்கு மிகவும் உதவியாக இருக்கிறது. நம்முடைய வேலை சுலபமாகிவிட்டது.*

## வழிகேடு

*தற்போது இந்த கிதாபில் என்ன வழிகேடு இருக்கிறது என்பதை தெள்ளத் தெளிவாக விரிவாக பார்ப்போம் வாருங்கள்.*

*போலி தவ்ஹித் வாதிகள் என்ன சொல்கிறார்கள்? நாயகம் அவர்கள் போருக்கு சென்றால் பொய்யை தான் சொல்வார்களாம்.*

*இந்த தப்லீக் ஜமாஅத்தைச் சார்ந்த தலைவர்கள் என்ன சொல்கிறார்கள்? நபிமார்கள் பகலில் பாவங்களை செய்பவர்களுடன் பழகுவதன் காரணமாக அந்தப் பாவத்தின் கறைகள் அவர்களுடன் ஒட்டிக் கொள்ளுமாம். அந்த அழுக்குகளை அவர்கள் தனிமையில் இருந்து கழுகிக் கொள்வார்களாம்.*

## இருந்தும் கூட

*அது மட்டுமல்ல அந்த கிதாபில் வேறு ஒரு காரியத்தையும் செய்து இருக்கிறார்கள். இதோ இதுதான் அவர்களது வாசகம்.*

**(நபிமார்கள் குற்றமற்றவர்களாகவும் பாதுகாக்கப்பட்டவர்களாகவும் இருந்தும்கூட...)**

*ஒருவரை புகழ்வது போல் புகழ்ந்து பிறகு தரம்தாழ்த்துவது கூடாது.*

*அதற்கு ஒரு உதாரணம் சொல்கிறேன் கேளுங்கள். அவர் நல்லவர், வல்லவர் நாளும் தெரிந்தவர் ஆனாலும் கூட...*

*நன்றாக புகழ்ந்து விட்டு கடைசியாக "ஆனாலும் கூட", அல்லது "இருந்தும் கூட" என்றெல்லாம் சொல்வது கேவலப்படுத்துகிற வார்த்தையாகும்.*

நபிமார்கள் வலிமார்கள் போன்ற உயர்ந்த மனிதர்களைப் பற்றி பேசும்பொழுது "ஆனால்" என்ற வார்த்தைக்கு இடமே இல்லை. அவர் பெரிய நபி தான் "ஆனால்..." என்ற ஒரு வார்த்தை வரவே கூடாது. அது அவர்களுடைய கண்ணியத்திற்கு கலங்கம் விளைவிப்பதாகும். அவர்களைப் பற்றி பேசும் பொழுதும், எழுதும் பொழுதும் கண்ணியத்தை கடைபிடிக்க வேண்டும். தெரியவில்லை என்றால் பேசாமல் இருந்து விடுவது நல்லது.

## தியானம்-அழுக்குகள்

**தியானம் செய்வதன் மூலம் அந்த அழுக்குகளை கழுகிக்கொள்கிறார்கள்.** இதுதான் அவர்களது வாசகம்.

நபிமார்கள், வலிமார்கள் இயல்பாகவே அதிகமாக நல்அமல்களை இரவும் பகலும் செய்துகொண்டே இருப்பார்கள். அல்லாஹுத்தஆலா அவர்களுக்கு உடல் அளவிலும் மனதளவிலும் அதிகமான வலுவை தந்திருக்கிறான். ஆகவே அவர்கள் சாதாரண மனிதர்களைவிட அபார ஆற்றல் படைத்தவர்கள். அவர்களைப் போல் நாம் நல்அமல்களை செய்யவே முடியாது. தொடர்ச்சியாக பகல் முழுவதும் நோன்பு நோற்பார்கள். தொடர்ச்சியாக இரவு முழுவதும் நின்றுவணங்குவார்கள். அவர்களுடன் நாம் போட்டி போடவே முடியாது. காரணம் அவர்கள் உடலாலும் உள்ளத்தாலும் மேன்மை பெற்றவர்கள்.

நாம் தொழுகும் இரண்டு ரக்காத்து தொழுகையை விட அவர்களது இரண்டு ரக்அத் தொழுகை மிகவும் உயர்வானது. காரணம் அவர்களுடைய உள்ளம் பரிசுத்தமானது.

அப்படிப்பட்ட பரிசுத்தமான அவர்களது அமல்களை கொச்சைப்படுத்தும் விதமாக இவர்கள் என்ன சொல்கிறார்கள் பாருங்கள். நபிமார்கள் இரவு நேரங்களில் வணக்கம் புரிவதே பாவக்கறைகளை போக்கிக் கொள்வதற்காகத்தானாம். அதோட அவர்கள் நிறுத்திக் கொள்ளவில்லை குர்ஆனிலிருந்து ஒரு வசனத்தை கொண்டு வருகிறார்கள். அது முஜம்மில் சூரா உடைய வசனம்.

قُمِ الَّيْلَ اِلَّا قَلِيْلًا ۙ

இரவில் - சிறிது நேரம் தவிர்த்து (தொழுகைக்காக எழுந்து) நிற்பீராக;

(அல்குர்ஆன் : 73:2)

இந்த வசனத்தில் அல்லாஹ் சுபஹானஹூதஆலா என்ன சொல்கிறான்? நபியே சிறிது நேரத்தைத்தவிர மீதமுள்ள நேரங்களில் இரவில் நின்று வணங்குங்கள்.

..........

பாவக்கறைகளை போக்கிக் கொள்வதற்காக நீங்கள் நின்று வணங்குங்கள் என்று அல்லாஹுத்தஆலா சொல்கிறானா? இல்லையே! பிறகு எதற்காக இந்த ஆயத்தை தேவையில்லாமல் இங்கே கொண்டு வந்து துர்வியாக்கியானம் செய்யவேண்டும்? என்ன அவசியம் இருக்கிறது? சாதாரண ஒரு நபர் வணக்கம் புரியும் பொழுது கூட இந்த வார்த்தையை நாம் சொல்லக் கூடாது.

உதாரணமாக...

ஒரு நபர் தொழுது கொண்டிருக்கிறார். அவரைப் பற்றி மற்ற நபர்களிடம் இவர் ஏன் தொழுது கொண்டிருக்கிறார் தெரியுமா இவர் பாவங்கள் நிறைய செய்த காரணத்தால் தான் தொழுது கொண்டிருக்கிறார் என்று சொன்னால். சும்மா விடுவார்களா?

மனிதர்களில் புனிதர்கள் நபிமார்கள். அவர்களைப் பற்றி இவ்வாறு சொல்வதற்கு எவ்வாறு தைரியம் வந்தது? ஒரு உண்மை முஸ்லிம் வாயிலிருந்து இப்படிப்பட்ட வார்த்தை வருமா? சற்று சிந்தித்துப் பாருங்கள் சகோதரரே!

## முடிவுரை

நபிமார்கள் பாவமற்றவர்கள். அவர்கள் வாழ்நாளில் ஒரு கணப்பொழுதும் கூட பாவம் செய்ததே கிடையாது என்பதற்கு ஆதாரங்களை அடுக்கி வைத்துக் கொண்டே போகலாம்.

அது சம்பந்தமாக இமாம்கள் பலரும் கிதாபுகளை எழுதி இருக்கிறார்கள். மாபெரும் முஃபஸ்ஸிர் ராஜி இமாம் அவர்கள் கூட இஸ்மதுல் அம்பியா என்ற ஒரு பிரம்மாண்டமான கிதாபை எழுதியிருக்கிறார்கள். அந்த கிதாபில் நபிமார்கள் பரிசுத்தவான்கள் என்பதை அவர்கள் பல ஆயத்துகள் ஹதீஸ்கள் மூலமாக நிரூபிக்கிறார்கள்.

நபிமார்களுடைய உயர்வை புரிந்து கொள்ளக் கூடிய விதத்தில் புரிந்து கொள்வதற்கு அல்லாஹ் நமக்கு தவ்ஃபீத் செய்வானாக! நபிமார்களுடைய பொருத்தம் பெற்ற மேன்மக்களில் அல்லாஹ் நம்மை ஆக்குவானாக! ஆமீன்!

**Written by Jafarulla Saqafi.**

94-ம் பக்கம் பார்க்கவும்

# மல்பூஜாத்

(ஹஜ்ரத் ஜீ மௌலானா முஹம்மது இல்யாஸ் (ரஹ்) அவர்களின் மணிமொழிகள்)

உர்து தொகுப்பு

மௌலானா முஹம்மது மன்ஸூர் நுஃமானி

தமிழாக்கம்

மௌலவி ஏ. பரக்கத்துல்லாஹ்

பாக்கவி, அதிபெ-பாஜில், கம்பம்.

வெளியீடு

டில்லி குதுப்கானா

திண்டுக்கல்.

விற்பனை உரிமை

ஸலாமத் பதிப்பகம்

பதிப்பாளர், விற்பனையாளர் & ஏற்றுமதியாளர்

விநியோகஸ்தர்கள்: குர்ஆன் மற்றும் இஸ்லாமிய நூல்கள்

95 (புதிய எண் 197), லிங்கிச் செட்டித் தெரு,

முதல் மாடி, சென்னை-600 001.

போன் : 2521 1981, 4216 7320

Fax: 4351 7320

"குர்ஆன் ஹதீதின் கருத்தை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நடைமுறைக்கேற்ப விளங்கிக் கொள்ள முயற்சிக்கப்பட்டால் இன்ஷா அல்லாஹ் ஒருபோதும் தவறான விளக்கம் ஏற்பட்டுவிடாது."

## ஏழாம் பாகம்

### ஹிஜ்ரி 1365 ரபீஉல் அவ்வல்-ஆகிர் மாதத்தில் அல்புர்கானில் வெளியானது

# 111

அன்பியாக்கள் (அலைஹிமுஸ்ஸலாம்) குற்றமற்றவர்களாகவும், பாதுகாக்கப்பட்டவர்களாகவும், ஞானங்களையும், நேர்வழிகளையும் நேரடியாக அல்லாஹ்விடமிருந்தே பெற்றுக் கொள்பவர்களாகவும் இருந்தும் கூட, அவர்களின் போதனைகளையும் வழிகாட்டல்களையும் தப்லீக் செய்வதற்காக ஒவ்வொரு வகையான ஜனங்களிடத்திலும் கலந்து பழகவேண்டியதும், போக்குவரத்தும் இருந்தது. ஆதலால் அவர்களின் புனிதமும், பிரகாசமுமான உள்ளங்களிலேயும் அந்தப் பாமர மக்களின் அழுக்குகளின் அதிர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது. பின்பு தனித்திருந்து வணக்கம், தியானம் செய்வதன் மூலம் அந்த அழுக்குகளைக் கழுவிக்கொள்கின்றார்கள். "சூராமுஜ்ஜம்மில்" என்ற அத்தியாயத்தில் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இரவில் நின்று (தஹஜ்ஜுத்) தொழுகுமாறு கட்டளையிட்டு "நபியே! மெய்யாக உமக்கு பகலிலே அதிகமாக சஞ்சரிக்க வேண்டியதிருக்கிறது" எனக் கூறப்பட்டுள்ளது. இதிலே, சய்யிதுல் அன்பியா (அலை) அவர்களுக்கும், பகலிலே அலைந்து திரியும் காரணத்தால் இரவின் இருட்டிலே தனித்திருந்து வணங்கவேண்டிய அவசியம் இருந்தது என்பது விளங்குகிறது. பின்பு இதற்கு முந்திய ஆயத்தில் "உமது இரட்சகனின் திருநாமத்தைத் தியானம் செய்வீராக! மேலும் தனித்திருந்து